உ
முருகன் துணை

427

# பழநி யாண்டவர்
## பதிகம்

அறநெறி ஞானபானு, தமிழ்ப் புலவர்
சென்னை. சிவ. முருகேச செட்டியார் அவர்கள்
இயற்றியது.



சென்னை.
ஷண்முகம் பிராண்டு ஸ்டீல் டிரங்கு ஒர்க்ஸ் சொந்தக்காரரும்
ஸ்ரீ வடபழநி யாண்டவர் தேவஸ்தான டிரஸ்டியுமாகிய
சி. ஞானசுந்தர நாயகர் அவர்களால்
பதிப்பித்து இலவசமாக
வழங்கப்பட்டது.

1949

உ

முருகன் துணை



# பழநி யாண்டவர்

## பதிகம்



காப்பு

முருகவிழ் பூஞ்சோலை மொய்பழநி சார்ந்த
முருகன்மேல் நற்பா மொழிய — உருகிநிதம்
குஞ்சரத்தைத் தஞ்சமெனக் கொஞ்சுதமிழ் செஞ்சொலினல்
நெஞ்சகத்தில் வைப்பாம் நினைந்து.



எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

விண்கொண்ட மதிகிரண அருள்மிகும் இறைவனே
விண்ணப்பம் யாதென்னிலோ
மிக்கசன் மார்க்கமுடன் அறவுரைகள் நீதியும்
வேதாந்த சித்தாந்தமும்
பண்கொண்ட விஞ்ஞான வுலகநடை யுந்தழுவிப்
பழமையின் சிறப்புக் காட்டிப்
பகருமேற் கோளுடன் பக்திபெறச் சொற்பொழிவு
பண்ணினுங் கேட்ப ரில்லை

திண்கொண்ட வுலகத்தில் பொருளினை மதித்துமே
சேர்ந்துபெரி யாரை மதியார்
செப்புநா வுலறவே, வித்தகம் பேசுவார்
தெய்வத்தை நிந்தைச் செய்வர்
கண்கொண்ட சூட்சிசெய் கயவர்பாற் சேராமல்
கருணையுடன் காத்தருளுவாய்
சருதறிய புருவத்தின் நடுநின்ற ஜோதியே
கனபழநி வடிவேலனே. (1)

முத்திபெற இறுதியில் விழைந்தநா னிம்மையில்
முருகனின் னடிப ரவியே
முத்தமிழ்ப் பாமாலை பாடிபுகழ் பேசபுவி
முழுதுமிசை யோங்க வேண்டும்
நித்தநித்தம் பூசை செய்யவேண்டும் தியான
நெறியிலுனைக் காண வேண்டும்
நேர்மையுறு நண்பருடன் கூடவேண்டும் தர்மம்
நேசித்துச் செய்ய வேண்டும்
சித்திபெற எதற்குமே பொருள்வேண்டும் துயரிலாச்
செல்வத்தில் வாழ வேண்டும்
தியாகமுடன் வீரமும் நோயற்ற வாழ்க்கையும்
தேசியப் பற்றும் வேண்டும்
இத்தரையில் நின்னருட் டுணைவேண்டும் எங்கணும்
இடுக்கணைத் தீர்க்க வேண்டும்
இதமுறும் புருவத்தின் நடுநின்ற ஜோதியே
இறைபழநி வடிவேலனே. (2)

அறியாத சிறுவனைப் பள்ளிக் கனுப்பியே
ஆடுவென்ற அட்ச ரத்தை
அனுதினம் சொல்லினும் ஐந்துவரு டங்களாய்
அதற்குமே லேறு மையரால்
அறிவுடைய பிள்ளையென் றூர்தான் நினைத்திடுவர்
அதுபோல யானு மந்தோ
அல்லலுறு வாழ்க்கையில் உண்டுண் டுறங்கியே
ஆசைவழி யடிமைப் பட்டேன்
அறிஞருரைக் கேட்டினும் அனுட்டிப்ப தொன்றுமிலை
அருள்பெறவும் நினைப்ப தில்லை
அவனியிற் பிறந்தபய னிதுவென்றே புருஷார்த்தம்
அணுவளவுஞ் சிந்தை செய்யேன்
அறிவாளி என்றென்னை யார்தான் மதித்திடுவர்
ஆண்டுபல வந்து மென்னே
அருள்வளரும் புருவத்தின் நடுநின்ற ஜோதியே
அருட்பழநி வடிவேலனே. (3)

மக்கள்மனை சுற்றமு மாடகூ டங்களு
மருவிடுஞ் சயன சுகமும்
மாடாடு செல்வமுங் காணியும் பூமியும்
மகிழ்ச்சியா யுண்ணு முணவும்
தக்கவர்கள் நேசமும் பதவியுங் கீர்த்தியும்
சார்ந்திடும் பெருமை யெல்லாம்
தந்தருளு முனதுதிரு வருளென நினைக்காமல்
தான்தேடும் பொருள தாக

மிக்கதொரு செருக்கினல் பந்தமாய் அலைந்துமே
　மெய்ந்நெறியை விட்டு மந்தோ
மேதினியி லுதவாமல் நெடுநாளு வாழ்வமென
　மேவுமெண் ணங்க ளுடையோர்
ஒக்கவுணர் கின்றநின் திருவருளை யுணர்வரோ
　ஒளியிலுணர் வாய்வி ளங்கும்
ஒள்ளியநல் புருவத்தின் நடுநின்ற ஜோதியே
　உருபழநி வடிவேலனே. (4)

சன்மார்க்க சங்கம்பல நிறுவியே உண்மைநெறி
　சாதிப்பர் போல்ந டித்துச்
சங்கிதக் கச்சேரி நாதசுர மேளமுதல்
　சதுர்காட்டிக் களிக்க வைப்பர்
துன்மார்க்க மாகவே பொருள்தேடி மங்கையரின்
　தொடர்புபெறத் தொண்டு செய்தே
சொல்லுமுப தேசமோ தன்னலங் கருதியே
　சூட்சியா யிருக்கு மந்தோ
நன்மார்க்க மாகஜம் புலனென்றி மேலுமனம்
　நடுநிற்கப் பழகி யறியார்
நாதவொலிக் கப்பாலும் ஜோதியுணர் வாழ்விலே
　நாடியொரு நாளு நில்லார்.
புன்மார்க்கத் துழல்கின்ற புல்லர்பாற் சேராமல்
　புனிதநெறி எனக்க ருளுவாய்
பொலிவுதரு புருவத்தின் நடுநின்ற ஜோதியே
　பொழில்பழநி வடிவேலனே. (5)

பொல்லாத கலிகால மென்றுபழி சொல்லிமனம்
போனவழி நடக்க லானுர்
போர்வந்த காலமென என்ருென்று மீயாமல்
பொருளினை ஈட்ட லானுர்
நல்லார்க ளுதித்திட்ட நாட்டிலே தெய்வத்தின்
நம்பிக்கை குறைய லாச்சு
நமன்போலவே வறுமை போராட வும்பக்தி
நாளுக்கு நாளும் போச்சு
கல்லாத கசடர்பால் நல்லவர்கள் போற்றியே
காலத்தைக் கழிக்க லுற்ருர்
கட்சிபல தோன்றியே யுலகத்தில் அமையாத
கலகங்கள் விளைக்க லாச்சு
எல்லாமுன் செயலாகச் சுழல்கின்ற காலமெனை
ஈர்த்தருள வேண்டு மரசே
இன்பநிலை புருவத்தின் நடுநின்ற ஜோதியே
எழில்பழநி வடிவேலனே. (6)

நாட்டினி லினித்தமிழ் வளர்ச்சிபெற லுண்டென்று
நாப்பறை யறைந்து மந்தோ
நற்றமிழ் அடிப்படை இலக்கியங் கற்றிடார்
நாத்திகம் பேசித் திரிவர்
காட்டாகச் சிலவற்றைப் படிப்பதும் விகடமுடன்
காலம்வீ ணுக்கு நூலைக்
கற்றிடுவர் இலக்கணச் சந்தியும் புணர்ச்சியுங்
கருதாம லெழுதத் துணிவார்

மேட்டிமைய தாகவே இடைச்செருக லென்று சொலி
மேதையர்கள் போல்ந டித்து
மேன்மைபெரு தமிழ்க்கலையைக் கொலைசெய்து ஆபாசம்
விளங்குமிட மீதென் றுமே
காட்டிடும் பேருக்குக் கண்டிக்கும் உரிமையிலை
கல்வியின் வளர்ச்சி யிதுவோ
கலைகாணும் புருவத்தின் நடுகின்ற ஜோதியே
கதிபழநி வடிவேலனே. (7)

செந்தமிழ் இலக்கியம் பத்துப்பாட் டெண்தொகை
செப்பிடும் சிந்தாமணி
சிலப்பதிகாரபதி னெண்கீழ்க் கணக்குகளும்
செய்யதிருக் கோவை யாரும்
புந்திமகிழ் சித்தியார் தெய்வதிரு வாசகம்
புகன்றிடும் திருமந்திரம்
புராணமுடன் பாரத ராமாயணங் காந்தம்
புனிதமுறு திருமு றைகளும்
சந்தமிகு திருப்புகழ் தாயுமானார்ப் புலவர்
சாற்றிடுந் தனிப்பாடலும்
சதகமுடன் ஆழ்வா ருரைத்தநா லாயிரம்
தனித்திலகும் பிரபந்தமும்
அந்தமுறு சித்தர்நூல் திருவருட் பாவையும்
அருளடைய கற்க வேண்டும்
அறிவறியும் புருவத்தின் நடுகின்ற ஜோதியே
அருபழநி வடிவேலனே. (8)

கண்கொண்டு பார்த்தகண் வேறொன்றைக் காணுமோ
கனகமலை போல்நி மிர்ந்து
கச்சுக் கடங்காது புடைத்திருகிப் பூரித்துக்
காம்புகண் கருத்து விம்மி
பெண்கொண்ட மங்கையரின் இருகொங்கை நடுவிலே
பிளந்தசிறு ஈர்க்குப் போகாப்
பெரியதன பாரத்தைச் சுமைகொண்டு தேய்ந்ததெனப்
பேசியிடை யைக்கு றித்தே
எண்கொண்ட சிற்றிடைப் பிடியிடைத் துடியிடை
எழில்மிகுங் கொடியி டையென
இயங்குநூல் நுண்ணிடை மின்னிடை இல்லையோ
எய்துமோ உளதோ வெனப்
பண்கொண்ட செந்தமிழ்ப் புலவரெழில் பேசினும்
பக்திநெறி பிறழுவில்லை
பரமவெளி புருவத்தின் நடுநின்ற ஜோதியே
பகர்பழநி வடிவேலனே. (9)

164013

அற்பருக் கிதஞ்சொல்லி யன்பிலா வன்பரை
அவைக்கூட்டி முன்னு ரையிலே
அன்பர்கா ளெனக்கூவி அறவுரைகள் கூறினும்
அவர்செவிக் கேறி டாதால்
கற்பனை யலங்கார ஆசியக் கதைசொலிக்
கைகொட்டிச் சிரிக்க வைத்து
களிக்கவுஞ் சொற்பொழிவு நிகழ்த்தியே புகழினில்
காலத்தைக் கழித்த தல்லால்

விற்பனர் வியக்கவே விஞ்ஞானப் புலமையும்
வேதாந்த சைவ நெறியும்
விளங்குகா வியநயம் பக்திநிலை கூறிட
விவேகியென மதித்த துண்டே
நற்பயன தாகநின் னருளடையப் பழகவும்
நலமருள வேண்டு மரசே
நடனமிடு புருவத்தின் நடுநின்ற ஜோதியே
நற்பழநி வடிவேலனே. (10)

## வாழ்த்து

வாழ்க பழநிநன் மாமலை யாண்டவன்
வாழ்க அன்னவன் வார்கழல் வாழ்த்துவோர்
வாழ்க வானவர் மாமறை யந்தணர்
வாழ்க நற்றமிழ் மண்ணகம் வாழியே.





Jyothi Printers, G. T., Madras.

இந்நூலாசிரியர் எழுதியன:

## உணவு நெறி

இந்தப் புஸ்தகம் மக்களுக்குப் பிணியும் துர்ப்பலமும் நீக்கி, தேகபலம், ஆயுள் விருத்தி, மனோசக்தி பெறுவதோடு, விஞ்ஞான முறையுடன் தினப்படி உண்ணும் ஆகார முறைகளும் வைத்தியமும் அடங்கியது. சாதாரணமானவர்களும் எளிதில் உணர்ந்து நடந்துக் கொள்ளக் கூடும். இது உடற்குறுதி பயக்கும் நூல்.

இதன் விலை அணா 8

*

## சித்தர் நெறி

இந்தப் புஸ்தகம் பதிநிலையை யடைய மிகலேசான பிராணாயாமம், மனம் அடங்க உபாயம், அன்றாட வாழ்க்கைக்குப் பயன் தரும் சரத்தோடுப் பழகும் ஜோசியம், செய்யுங் காரியங்களில் வெற்றி பெறும் வழி, தியான அனுபவ முறைகள் முதலியன அடங்கியது. சாதாரணமானவர்களும் எளிதில் உணர்ந்து நடந்துக் கொள்ளக்கூடும். இது உயிர்க்குறுதி பயக்கும் நூல்.

இதன் விலை அணா 4

---

கிடைக்குமிடம்:—

சிவ. முருகேச செட்டியார்,
தமிழ்ப் புலவர்,
10, கச்சாலீஸ்வரன் தோட்டத் தெரு,
மண்ணடி, சென்னை.